ஸ்ரீ:



ஸ்ரீ கனகவல்லிநாயிகா ஸமேத ஸ்ரீ வீரராகவ பரப்ரம்மணே நம:

ஸ்ரீ அஹோபிலமடம் ஆதீன பரம்பரை மிராசைச் சேர்ந்த
ஸ்ரீவீரராகவஸ்வாமி தேவஸ்தானம்,
திருஎவ்வுளூர்.

# ஸ்தல புராணம்

## (க்ஷேத்ரமாஹாத்ம்யம்)



**SRI VEERARAGHAVASWAMI DEVASTHANAM,**
*Hereditary Trustee H.H. The Jeer of Sri Ahobila Math,*
*Tiruvallur - 602 001.*
*Phone: 2766 0378     Fax : 2766 4333*
*E-mail: yesveedeetvr@gmail.com*
*website: www.svdtiruvallur.com*

ஸ்ரீ:



பரம்பரை அறங்காவலர்

ஸ்ரீமத் அழகிய சிங்கர் (46வது பட்டம்)

ஸ்ரீவண் சடகோப ஸ்ரீரங்கநாத யதீந்த்ர மஹாதேசிகன்



ஸ்ரீ கனகவல்லித்தாயார் ஸமேத ஸ்ரீ வீரராகவர் – திருவள்ளூர்

ஸ்ரீ:



ஸ்ரீ அஹோபிலமடம் ஆதீன பரம்பரை மிராசைச் சேர்ந்த
ஸ்ரீவீரராகவஸ்வாமி தேவஸ்தானம்,
திருஎவ்வுளூர்.

# ஸ்தல புராணம்

**(க்ஷேத்ரமாஹாத்ம்யம்)**



**Sri Veeraraghavaswami Devasthanam,**

Hereditary Trustee H.H. The Jeer of Sri Ahobila Math,
Tiruvallur - 602 001.

Phone: 2766 0378 Fax : 2766 4333
E-mail: yesveedeetvr@gmail.com
website: www.svdtiruvallur.com

மறுபதிப்பு – 2015 Rs. 20 /-

ஸ்ரீ:

ஸ்ரீ கனகவல்லிநாயிகா ஸமேத ஸ்ரீ வீரராகவ பரப்ரம்மணே நம:

ஸ்ரீமதே ஸ்ரீலக்ஷ்மீந்ருஸிம்ம பரப்ரம்மணே நம:

ஸ்ரீமதே ஸ்ரீவண் சடகோப ஸ்ரீரங்கநாத யதீந்த்ர மஹாதேசிகாய நம:

# முன்னுரை

ச்ரிய:பதியான ஸர்வேச்வரன் பர, வியூக, விபவ, அந்தர்யாமி, அர்ச்சை என்கின்ற ஐந்து நிலைகளில் எழுந்தருளியிருப்பதாக சாஸ்த்ரமறிந்தவர்கள் கூறுகின்றனர்.

பரரூபம் வைகுண்டத்தில் சேவையாகும். வாசுதேவ, ஷங்கர்ஷண, ப்ரத்யும்ந, அநிருத்தர்கள் வியூக மூர்த்திகள். தசாவதாரங்கள் முதலியவை விபவங்களாகும். ஒவ்வொருவருடைய இதயத்திலும் இருக்கும் ஈசன் அந்தர்யாமி எனப்படும். கோயில்களில் நமது கண்களுக்கு இலக்காக நிற்கின்ற தெய்வங்களே அர்ச்சைகளாகும். பக்தர்களின் பிரார்த்தனைக்கநுகுணமாக அவ்வவ்விடங்களில் அர்ச்சையில் எம்பெருமான் சேவை ஸாதிக்கிறான். அவைகளிலும் நூற்றியெட்டு திவ்யதேசங்களுக்கே ஆழ்வார்கள் மங்களாசாஸனம் செய்தருளிய ஏற்றமுண்டு. இவ்வாறு ஆழ்வார்களால் மங்களாசாஸனம் செய்யப்பெற்ற தொண்டை நாட்டுத்திருப்பதிகளில் திருவெவ்வுளூர் ஒன்றாகும். இத்திவ்யதேசம் வடமொழியில் "கிங்கிருகேசபுரி" என்றும் புராணங்களில் வீக்ஷாரண்யம் என்றும் வழங்கப்படுகிறது.

புராணங்கள் ஸாத்வீகம், ராஜாஸம், தாமஸம் என்று மூன்று வகைகளாக பிரிக்கப்பட்டிருக்கின்றன. அவைகளுள் ஸாத்வீக புராணங்கள் உயர்ந்தது. அதனிலும் சிறந்த மார்கண்டேய புராணத்தில் க்ஷேத்ர காண்டத்தில் 100 அத்தியாயங்களுக்குமேல் 11 அத்தியாயங்களில் வீக்ஷரண்ய க்ஷேத்ர மஹாத்மியம்

விவரிக்கப்பட்டிருக்கிறது. இதை மூலமாகக் கொண்டு ஸ்தலபுராணம் ( தலவரலாறு) இக்கோவிலின் இந்த பரம்பரை தர்மகர்த்தாவாக இருந்த 34ம் பட்டம் ஸ்ரீ அத்திப்பட்டு ஸ்ரீஅழகியசிங்கரால் (ஜீயர் ஸ்வாமி) மணிப்ரவாள வ்யாக்யானத்துடன் க்ரந்தாக்ஷரத்தில் ஸாதிக்கப்பட்டது. இந்த மஹாத்ம்யம் 41-வது பட்டம் ஸ்ரீஅழகியசிங்கர் நியமனப்படி தேவனார்விளாகம் ஸ்ரீஅழகியசிங்கரால் பூர்வாச்ரமத்தில் 1934-ஆம் வருடம் அச்சிடப்பட்டது. இம் மஹாத்ம்யத்தின் கருத்துரையை ஸ்ரீ உ.வே. புரிசை நடாதூர் ஸ்ரீபாஷ்ய ஸிம்ஹாசனம் கிருஷ்ணமாசாரியார் ஸ்வாமி (முன்னாள் தேவஸ்தான கௌரவ ஏஜெண்ட்) கைங்கர்யம் செய்த காலத்தில் 1966-ஆம் ஆண்டு அச்சிட்டு வெளியிட்டார். இதன் ப்ரதிகள் இப்போது கிடைப்பது அரிது. மேற்படி கருத்துரையை ஆதாரமாகக் கொண்டு பக்தர்கள் எல்லோரும் அறிந்து கொள்ளும்படி சுருக்கமாக இந்த புத்தகம் எழுதப்பட்டு அச்சிடப்பட்டிருக்கிறது. இந்த புத்தகத்தை படித்து மகிழ்ந்து பலன்பெற தன்னடியார்கினியன் எந்தை எம்பெருமான் அநுக்ரஹத்தை ப்ரார்த்திக்கிறேன்.

ஸ்ரீ அழகிய சிங்கர் நியமனப்படி

திருவள்ளூர் C.C. சம்பத்

3.11.2014 கௌரவ ஏஜெண்ட்

ஸ்ரீ:

# க்ஷேத்ர விளக்கம்

| | | |
|---|---|---|
| 1. | பெருமாள் திருநாமம் | - திருஎவ்வுள்கிடந்தான் என்கிற ஸ்ரீ வீரராகவ பெருமாள் |
| 2. | க்ஷேத்ரம் | - புண்யாவர்த்த க்ஷேத்ரம் |
| 3. | திருக்கோயில் | - எவ்வுள் என்கிற கிம்க்ருஹம் |
| 4. | தீர்த்தம் | - ஹ்ருத்தாபநாசிநீ தீர்த்தம் |
| 5. | தாயார் திருநாமம் | - வஸுமதி என்கிற கனகவல்லித்தாயார் |
| 6. | வனம் | - வீக்ஷாரண்யம் |
| 7. | விமானம் | - விஜயகோடி விமானம் |
| 8. | ப்ரத்யக்ஷம் | - 1. சதுர்முகன், 2. சங்கரன், 3. சாலிஹோத்ர மஹர்ஷி முதலியவர்களுக்கு ப்ரத்யக்ஷம் |
| 9. | அவதாரம் | - தை அமாவாஸ்யை |
| 10. | புராணம் | - மார்க்கண்டேய புராணம் 100வது அத்தியாயம் முதல் 111வது அத்தியாயம் வரை |
| 11. | மங்களாசாஸனம் | - திருமழிசைபிரான், திருமங்கை ஆழ்வார், ஸ்ரீவேதாந்த தேசிகன் |
| 12. | பரிபாலனம் | - ஸகல மிராசுகளும் ஸ்ரீஅஹோபில மடம் ஸ்ரீமத்வேதமார்க்கேத்யாதி ஸ்ரீமத் அழகிய சிங்கரைச் சார்ந்தவை. |

ஸ்ரீ:



ஸ்ரீ கனகவல்லிநாயிகா ஸமேத ஸ்ரீ வீரராகவ பரப்ரம்மணே நம:
ஸ்ரீமதே ஸ்ரீ வண்சடகோப ஸ்ரீரங்கநாத யதீந்த்ர மஹாதேசிகாய நம:

# ஸ்ரீ புண்யாவர்த்தக்ஷேத்ர மாஹாத்ம்யத்தின் அவதாரிகை

லக்ஷ்மீகாந்தனான எம்பெருமான் வேத, ஆகம சாஸ்த்ரங்களில் ஓதியபடியே பூலோகத்திலுள்ள எல்லா ஜீவர்களையும் காப்பாற்ற வேண்டி பரம கருணையால் ஸ்ரீவைகுண்டத்தை விட்டு இப்பாரின்கண், (1) ஸ்வயம் வ்யக்தம், (2) தைவம், (3) ஸைத்தம், (4) மானுஷம் என்று சொல்லுகிற நான்குவிதமாக உள்ள விஷ்ணு ஸ்தலங்கள் நூற்றெட்டினுள் ஸைத்தம் அல்லது ஆர்க்ஷம் என்று சொல்லப்பட்ட இப்புண்யாவர்த்த க்ஷேத்திரத்தில் (திருஎவ்வுள்ளூரில்) மஹாகொடிய பாபங்களையும் போக்கடிக்கக்கூடிய மஹிமை வாய்ந்த ஹ்ருத்தாப நாசநீ என்ற புண்ய தீர்த்தத்தின் வடகரையில் தவத்தினால் ஸித்தியடைந்த பெருமையையுடைய ஸ்ரீசாலிஹோத்ர மஹர்ஷிக்கு ப்ரத்யக்ஷமாய் இக்கலியுகத்திலும் தன்னையடைந்த ஆச்ரிதர்களின் குறைகளை நீக்கி இஷ்டபலன்களை ஈந்து ரக்ஷிக்க வேண்டியே சேஷசயனத்தில் திவ்யமங்கள விக்ரஹ ரூபியாய் சயனித்து தனது நாபியின்கண் தோன்றிய நான்முகனுக்கு ஒரு திருக்கையால் ப்ரணவத்தை உபதேசித்தும், மற்றொரு திருக்கையால் சாலிஹோத்ர மஹர்ஷியின் சிரஸ்ஸில் அபயப்ரதானம் பண்ணிக் கொண்டும், தென்திசையில் சிரஸ்ஸையும், வடக்கே திருவடி நிலைகளையும் வைத்து சயனித்து, விஷ்ணுஸஹஸ்ரநாமத்தில் உள்ள பேஷஜம், பிஷக் என்ற திருநாமங்கள் பொருந்த, வைத்ய வீரராகவனாய் அதிஸௌந்தர்ய சோபையுடன் மந்மதாகாரராய் ஸேவை

தந்தருளி தன்னிடம் ப்ரார்த்தனை செய்யும் பக்தர்களின் எல்லா விருப்பங்களையும் தந்து அவர்களைகடாக்ஷித்தருளுகிறான்.

## திருஎவ்வுள்ளூரின் மஹிமை

ஸ்ரீ சதானிக மஹாராஜன் குமாரன் ஸஹஸ்ரானீக மஹாராஜன் மார்க்கண்டேய ரிஷியை நோக்கி, ஓ முனிவரே! பூலோகத்தில் உள்ள ஸ்தலங்களுள் யோகத்தினால் விரைவில் ஸித்தியடையத்தக்க தபோவனமும், புண்ய தீர்த்தமும், பகவத் ஸன்னிதியும் எந்த க்ஷேத்ரத்தில் உள்ளதோ அதை அடியேனுக்கு அருளிச்செய்ய வேண்டும் என்று மிக்க வணக்கத்துடன் தெண்டனிட்டுப் பிரார்த்தித்து நின்றான். அப்படிக்கேட்ட ஸஹஸ்ரானீக மஹாராஜனுக்கு, க்ரதயுகத்தில் தேவபாகருக்கும் ஸ்ரீ சாலிஹோத்ர மஹர்ஷிக்கும் நடந்த ஸம்வாதத்தை ஸ்ரீ மார்க்கண்டேய முனிவர் பின்வருமாறு உபதேசித்து அருளுகிறார்.

ஸ்ரீ பதரிகாச்ரமத்தில் உள்ள கங்காதீரத்தில் தேவபாகரென்னும் ஓர் முனிவர் வஸித்திருந்தார். அவர் ஒரு நாள் ஸ்ரீ சாலிஹோத்ரமுனிவரை அணுகி, வணங்கி தெண்டனிட்டு, "மஹாமுனிவரே! தவத்தினால் விரைவில் ஸித்தியடையக்கூடிய தூய தபோவனமும், மிகக்கொடிய பாபங்களையும் போக்கவல்ல புண்யதீர்த்தமும், இஹபரஸாதனங்களை ஈந்தருளும் எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலும் எங்கு உள்ளது? அடியேனுக்கு அருளிச்செய்ய வேண்டும்" என்று வணக்கத்துடன் பிரார்த்தித்தார். அதற்கு சாலிஹோத்ரமுனிவர் 'ஓ முனிவரே! நீர் வினவியது கிடைக்கக்கூடியது கடினம் எனினும் இப்பாரின்கண் ஒன்றுள்ளது அதைச் சொல்லுகிறேன் கேளும்' என்றார்.

விந்தியபர்வதத்தின் அருகில் உள்ள வெள்ளிமலை வழியாய் ஸ்ரீ அகஸ்த்யராச்ரமத்தில் உண்டாகிப் பெருகுகிற "விருத்தக்ஷீரநதி" என்றொரு நதியுண்டு; அதற்கு வடக்காகவும் கல்லாற்றுக்குக் கிழக்காகவும், குசஸ்தலீ நதிக்குத் தெற்காகவும்

ஸமுத்திரத்தின் மேற்காகவும், கிழக்கு மேற்கு ஐந்து யோசனை நீளமும் தெற்கு வடக்கு ஒரு யோசனை அகலமும் உள்ள "புண்யாவர்த்தம்" என்றொரு க்ஷேத்ரமிருக்கிறது. அதில் "வீக்ஷாரண்யம்" என்கிற ப்ரஸித்த தூய தபோவனமும், தேவதைகளால் உண்டாக்கிய "ஹ்ருத்தாப நாசிநீ" என்கிற ஓர் மஹாபுண்ய தீர்த்தமும் அதன் வடகரையில் ஆச்ரிதர் கண்களுக்கு ஆனந்தகரமான "ஸ்ரீவிஜயகோடி" என்னும் விமானத்தில் நாகத்தணையில் துயிலும் ஸ்ரீமந்நாராயணனுடைய திருக்கோயிலும் அமைந்திருக்கிறது. நீர் அங்கு சென்று யோகமாகிய தவத்தைச் செய்தீராகில் விரைவில் முக்தியடைவீர் என்று அருளிச்செய்து சென்றார்.

## வீக்ஷாரண்யம் என்கிற தபோவனத்தின் பெருமை

இவ்வனம் மிகவும் இனிய பழங்களைத் தரக்கூடிய உயர்ந்த மரங்கள் அடர்ந்தும், யாகத்திற்கு உபயோகமான தர்ப்பம், ஸமித்து, துளசி முதலிய ஒஷதிகளுடன் கூடியும், மல்லிகை, செண்பகம் போன்ற புஷ்பங்களால் பரிமளித்தும் ஸிம்ஹம், காட்டானைகள் முதலான கொடிய மிருகங்கள் ஸஞ்சரித்தும், ஹம்ஸம், மயில், குயில் முதலிய பக்ஷிகளால் கோஷித்தும் ஆங்காங்கு அனேக குகைகளும், பர்ணசாலைகளும், யக்ஞசாலைகளும், சிற்சில வெளியிடங்களில் நகரங்கள் சூழ்ந்தும் மிகவும் ரம்யமாய் ப்ரகாசித்துக் கொண்டுமிருந்தது. அங்கே வஸிஷ்டர், வாமதேவர், வ்யாசர் முதலான ரிஷிகளும், ஏகாந்த சீலர்களான ப்ராம்மணோத்தமர்களும், பராக்ரமத்தால் ஸத்யகீர்த்தி பெற்ற க்ஷத்ரியர்களும், குபேரனையொற்றவைச்யர்களும், பகவானிடமும் பாகவதர்களிடமும் பக்தி செய்து பெருமை வாய்ந்த மற்றவர்களும். தம் தம், நித்யகர்மங்களை குறைவரச்செய்து மிகவும் ஸந்துஷ்டர்களாய் வாழ்ந்து கொண்டிருந்தார்கள். ஒரு ஸமயம் அஸுரகுலத்தில் உதித்த மது, கைடபன் என்னும் இரண்டு ராக்ஷஸர்களுக்கும் ஸ்ரீ மஹா விஷ்ணுவுக்கும் மிக பயங்கரமான யுத்தம் ஏற்பட்டது. அப்போது அந்த அஸுரர்கள் ஆகாயத்தையளாவி உயர்ந்திருந்தமையால் அவர்களிடம் பயந்து

ஸூர்ய சந்திரர்கள் ப்ரகாசியாமலும், வாயு வீசாமலும், அக்னி ஜ்வலிக்காமலும் மிகவும் கொடிய பயமேற்பட்டு ரிஷிகளும், ப்ராம்மணர்களும் யாகங்கள் செய்யவும் வேதங்களோதவும் நிலையற்று கதி கலங்கினார்கள். இந்நிலையில், அக்கொடிய அரக்கர்களை அழிக்கக் கருதி பகவான், மூவுலகத்தையும் தன் ஆஜ்ஞையால் அழிக்கவல்ல ஸ்ரீஸுதர்சனாழ்வானைப் ப்ரயோகித்தருளினார். மிகப் பெரிய அக்நிஜ்வாலையுடன் துரத்தி வருகிற சக்ராயுதத்திற்கு பயந்து அந்த ராக்ஷஸர்கள் எங்கு ஓடியும் தங்களை ரக்ஷித்துக்கொள்ள இடம் காணாமல் இவ்வீக்ஷாரண்யத்திற்கு ஓடி வந்து மறைந்தார்கள். ஸர்வ சக்தனான பகவான் அவர்களை விமானத்திலிருந்து சக்ராயுதத்தால் ஸம்ஹரித்து ரிஷிகளுக்கும் ஸகலஜனங்களுக்கும் நேர்ந்த ஆபத்துக்களைப் போக்கி விஜயஸ்ரீயுடன் விளங்கியபடியால் இந்த விமானத்திற்கு ஸ்ரீவிஜயகோடி விமானம் என்ற பெயர் உண்டாயிற்று. இந்த ஸ்தலத்தில் யாராகிலும் தெரிந்தும் தெரியாமலும் செய்கின்ற புண்ணியங்கள் ஒன்று ஆயிரமாக விருத்தியடைந்தும், பாபங்கள் நசிந்தும் போவதால் புண்யாவர்த்தக்ஷேத்ரம் என்ற பெயரும் ஏற்பட்டது. கொடிய பாபங்களைச் செய்த மதுகைடபர்கள் முதலான ராக்ஷஸர்களும் இப்புண்ய க்ஷேத்ரத்தில் இறந்ததால் பெரும் துயரைத் தரக்கூடிய யமலோகத்தை அடையாமலேயே ஸ்ரீமந்நாராயணனுடைய ஸாயுஜ்யமாகிய மோக்ஷத்தை அடைந்தார்கள். அந்த மதுகைடபாஸுரர்களின் ஸம்ஹாரத்தினால் உண்டான ச்ரமம் தீர எம்பெருமான் விஜயகோடி விமான மத்யத்தில் சேஷதல்பத்தில் சயனித்து பக்தர்களை முக்காலத்திலும் ரக்ஷித்தருளுகிறார் என்று அருளிச்செய்தார். இதுவரை அடியேனுக்கு உபதேசித்த க்ஷேத்ர மஹிமையைக் கேட்டு ஸந்துஷ்டனானேன். இனி அத்தீர்த்த மஹிமையையும் அருளிச்செய்ய வேண்டுகிறேன் என்று மறுபடியும் மார்க்கண்டேய முனிவரை நோக்கி ஸஹஸ்ரானீக மஹாராஜன் கேட்டான்.

## ஹ்ருத்தாபநாசிநீ என்னும் புண்ய தீர்த்தத்தின் மஹிமை

ஹ்ருத் - ஹ்ருதயத்திலுள்ள, தாப - தாபங்களை, நாசிநீ - போக்கடிக்கவல்லது.

ஹ்ருத்பாப நாசிநீ என்றும் சிலர் சொல்லுவர். இதனால் மனதால் நினைத்த பாபத்தையும் போக்கடிக்கக் கூடியது என்றும் ஏற்படுகிறது.

ஓ ஸஹஸ்ரானீக மஹாராஜனே! இத்தீர்த்தமானது ஹம்ஸம், நீர்கோழி, ஆமை முதலிய ஜலஜந்துக்களால் நிறைந்தும், ஆம்பல், நீலோத்பலம், செங்கழுநீர், தாமரை முதலிய புஷ்பங்கள் ஸதா காலங்களும் புஷ்பித்தும், பார்க்கப் பார்க்கப் பரவசமாய் ரமணீயமாய் விளங்கி வருகிறது. இதில் ஸ்நாநம் செய்ய முடியாத ரோகிகள் முதலியவர்கள் கண்ணால் கண்டாலும் வ்ருத்தர், பாலர் முதலியவர்கள் ஸ்பர்சித்தாலும் சக்தியுள்ளவர்கள் ஸ்நாநம் செய்தாலும் மூன்றும் ஒரே பலனைத் தரக்கூடிய மஹிமை வாய்ந்த தீர்த்தமானதால் பூர்வஜந்ம பாபசேஷத்தாலும் இப்பிறவியில் ஏற்படும் பாபவிசேஷங்களாலும் உண்டான கொடிய பாபங்கள் எல்லாம் நிவர்த்தியாகிவிடும். இதில் ஒரு வருஷ காலம் தவறாமல் ஸ்நாநம் செய்தவர்கள் தான் கோரின பலனை இஹத்தில் அடைந்து ஸந்தோஷித்து பரத்திலும் மோக்ஷமாகிய நற்கதியைப் பெறுகிறார்கள். தை அமாவாஸ்யை தினம் கங்கை முதலான ஸர்வ புண்யதீர்த்தங்களும் இதில் சேருகிறபடியால் ப்ரஹ்மாதி ஸமஸ்த தேவர்களும், வஸிஷ்ட நாரதர் முதலிய ரிஷிகளும் ஸகல ஜனங்களுடன் இத்தீர்த்தத்தில் நீராடி விசேஷ பலன்களை அடைந்து ஸந்தோஷிக்கிறார்கள்.

### ஹ்ருத்தாபநாசிநீ தீர்த்தத்தின் ப்ரபாவமான தக்ஷயக்ஞம்

ஹிமாலயத்தில் ருத்ரன் தக்ஷப்ரஜாபதியின் பெண் ஸதீ என்பவளை மணம்புரிந்து வருகையில் தக்ஷன் ஓர் யாகம் செய்தான். அந்த வேள்விக்கு தக்ஷன், தன் பெண்ணான ஸதீ,

பசுபதி இவர்களைத் தவிர மற்றெல்லோரையும் வரவழைத்து நடத்தப்படுவதைத் தன் யோக மஹிமையாலறிந்த ஸதீயானவள் தன் பர்த்தா தடுத்தும் கேளாது தக்ஷனது யாகசாலைக்குள் வந்து சேர்ந்தும் தனது பிதாவான தக்ஷன் தன்னை வரவேற்காது அவமதித்ததால் மிகுந்த கோபத்துடன் "தந்தையே! நீர் செய்யும் இப்பெரிய வேள்விக்கு, மூவுலகமும் நடுங்கும்படி செய்யும் சக்தி வாய்ந்த என் பர்த்தாவையும் என்னையும் அழையாது மற்ற எல்லாப் பெண் மருமகனார்களையும் அழைத்து நடத்தும் காரணம் யாதோ?" என்று வினவிக்கொண்டே, கோபத்தாலும், அவமானத்தாலும் "நீர் இப்பெரிய வேள்வியை நிறைவேற்றுகிறீரா பாரும்" என்று சொல்லி யோகமஹிமையால் தன் சரீரத்தை பிதாவின் முன்னாலேயே விட்டுவிட்டாள்.

இதையறிந்த ருத்ரன் மஹாகோபங்கொண்டு ப்ரளயகால அக்னிக்கொப்பான தனது நெற்றிக்கண்ணைத் திறந்து மஹா பயங்கரரூபத்துடன் கூடிய வீரபத்ரன் என்பவனை ஸ்ருஷ்டித்துத் தன்னை அவமதித்த தக்ஷனை உடனே கொன்றுவிடும்படி உத்தரவிட்டார். வீரபத்ரனும் அந்த க்ஷணமே தக்ஷனுடைய யாகசாலைக்குள் வந்து ஸகல ரிஷிகளையும் ப்ராம்மணர்களையும் அடித்துத் துரத்தி யாகத்திற்கு வந்திருந்த தேவதைகளையும், ரிஷிகளையும் துன்புறுத்தி கடைசியில் தக்ஷனுடைய தலையைக் கொய்து ஹோமகுண்டத்தில் எறிந்து த்வம்ஸஞ்செய்து ராக்ஷஸர்களுக்கு திருப்தியை உண்டாக்கிவிட்டு வீரபத்ரன் உமாபதியின் முன் வந்து நின்றான். ப்ரஹ்மவித்தான தக்ஷனை வீரபத்ரன் மஹேச்வரனுடைய உத்தரவினால் கொன்றபடியால் அந்த ப்ரஹ்த்தியானது ருத்ரன் முன் வந்து தொடர்ந்தது. அதைத் தவிர்க்கச் சம்புவானவன் எவ்வளவோ ப்ரயாஸையுடன் தீர்த்தயாத்திரை செய்தும், அது விலகாமலே பின்தொடர்வதைப் பார்த்து யோசித்திருக்குங்கால், "ஓ மஹேச! இத்தோஷமாகிய ப்ரஹ்மஹத்தி நீங்க நீர் வீக்ஷாரண்யத்திலுள்ள ஹ்ருத்தாபநாசிநீ என்னும் புண்ய தீர்த்தத்தில் போய் நீராடும்" என்று ஆகாசவாணி

சொல்லக்கேட்டு ருத்ரனும் அப்படியே சென்று நீராடியவுடன் அந்த ப்ரஹ்மஹத்தியும் விலகிப் போய்விட்டது. அது முதல் ருத்ரன் அந்த தீர்த்தத்தின் கரையிலேயே ஸ்ரீ வீரராகவனை ஸதா தரிசித்துக் கொண்டு தீர்த்தீஸ்வரர் என்னும் பெயருடன் வாயுமூலையில் கோயில் கொண்டு விளங்கி வருகிறார்.

இப்படிச் சொன்ன சாலிஹோத்ரரைப் பார்த்து தேவபாகர் மறுபடியுமொரு ஸந்தேஹந்தோன்றி, ஓ ஸ்வாமி! ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் திருவடியில் உண்டாகி ஸர்வபாபங்களையும் அனலில் பஞ்சுப்பொதிபோல் எரிக்கக்கூடிய மஹிமை வாய்ந்த புண்யதீர்த்தமான கங்கையே ருத்ரன் வசம் இருக்க, அதனால் போக்க முடியாது, இத்தீர்த்தத்தால் பாபவிமோசனம் செய்விக்கக் கூடிய ஏற்றம் ஹ்ருதந்தாபநாசிநீ என்கிற புஷ்கரிணிக்கு எப்படி வந்தது ? அதை எனக்கு விஸ்தாரமாய் அருளிச்செய்ய வேண்டும் என்று மறுபடியும் வினயமாகக் கேட்டார். தேவபாகரே! அதன் விஷயமாய் நான்முகனுக்கும் நராதருக்கும் நடந்த புராதன கதை ஒன்று சொல்லுகிறேன் கேளும். ஒரு சமயம் தை அமாவாஸ்யை தினம் ஹ்ருதாபநாசிநீ தீர்த்தத்தில் வஸிஷ்டர், வாமதேவர், ஜமதக்நி, வால்மீகி, அத்ரி, ப்ருகு, காச்யபர், யாஜ்ஞவல்க்யர், புரஸ்த்யர், விச்வாமித்ரர் முதலான ஸகல ரிஷிகளும், இந்திராதி ஸமஸ்த தேவர்களும் ஒன்றுகூடி நீராடுவதை நாரதமுனிவர் பார்த்து, ஓ - தபஸ்ரேஷ்டர்களே! இப்புண்ய தினத்தில் மஹோத்தமமான கங்காதீர்த்தத்தில் ஸ்நாந தர்ப்பணாதிகளைச் செய்வதை விட்டு இங்கு வந்த காரணம் யாதோ ? என்று கேட்க, அவர்கள் சற்று யோசித்து இத்தீர்த்தத்தின் மஹிமையை உமது பிதாவான ப்ரஹ்மதேவனைத்தான் கேட்க வேண்டும் என்று சொன்னவுடன் எல்லோரும் சேர்ந்து ப்ரஹ்மாவிடம் சென்று அனேக நமஸ்காரங்கள் செய்து கைகளைக் கூப்பிக் கொண்டு ஹ்ருத்தாபநாசிநீ என்னும் தீர்த்தத்தின் ப்ரபாவத்தை அடியோங்களுக்கு விஸ்தாரமாய் தெரிவித்து அருள்புரிய வேண்டுமென ப்ரார்த்தித்து நின்றனர்.

## ப்ரத்யும்ந மஹாராஜனால் இத்தீர்த்தம் மஹிமை பெற்ற வரலாறு

ஓ தபோதனர்களே! நீங்கள் வினவிய தீர்த்த மஹிமையைச் சொல்லுகிறேன் கேளுங்கள்:

க்ருதயுகத்தில் ஸ்வாயம்புவ மனுவின் வம்சத்தில் பிறந்த ப்ரத்யும்ந மஹாராஜன் என்னும் ஓர் புண்யபுருஷன் புத்திரப்பேரின்றி வருந்தி இத்தீர்த்த மஹிமையை கேள்வியுற்று நூறு வருஷ காலம் இதன் கரையில் தனது இடது கால் கட்டைவிரலை பூமியில் ஊன்றி கண்களை மூடிக்கொண்டு ஸ்ரீமந் நாராயணனைக்குறித்து மஹா உக்ரமான தவம் செய்தான். பகவான் அவனது பக்திக்கு இரங்கி, கருடாரூடனாய் ஸர்வாபரணபூஷிதனாய் வந்து காக்ஷியளிக்க மஹாராஜனும் தன் கண்களை மூடி இருந்தமையால் பகவான் வந்ததை அசரீரி வாக்கினால் அறிந்து கண்களைத் திறந்து கார்முகில் வண்ணனைக் கண்ணாரக்கண்டு களித்து பரமஸந்துஷ்டனாய் பரவசத்துடன் மெய்மறந்து நிற்கையில் பகவான், "ராஜந்! உன்னுடைய தவத்துக்கு உகந்து வந்தேன் நான். நீ வேண்டும் வரம் கேள்" என்று கேட்க, ராஜனும் மிக்க ஸந்தோஷத்துடன் "ஸ்வாமிந்! அடியேன் புத்திரப் பேரில்லாது வருந்தியே இத்தவம் புரிந்தேன். அதனால் தேவரீர் அருளையும் பெற்றேன். அடியேன் ஸந்தானபாக்யம் பெற அருளுவதுடன் தேவரீர் இங்கு எழுந்தருளிய தினமான இன்று தை அமாவாஸ்யையானதால் இன்று முதல் இத்தீர்த்தத்திற்கு தை அமாவாசை தினம் பூமியின்கண் உள்ள எல்லா புண்ய தீர்த்தங்களைக் காட்டிலும் அதிக மஹிமையையும் தருமாறு வேண்டுகிறேன்" என்று ப்ரார்த்தித்து நின்றான். ஸ்ரீமந்நாராயணனும் தான் எழுந்தருளி அங்கு ஸாந்நித்யம் செய்த நாளாகிய தை அமாவாஸ்யை தினம் மிகவும் உயர்ந்த புண்ய தினமானதால் அரசன் விரும்பிக்கேட்ட இரண்டு வரங்களையும் ஈந்து மறைந்தார். அது முதல் இத்தீர்த்தத்துக்கு பகவானே ப்ரஸித்த மஹிமையைத் தந்தருளியதால் பூலோகத்தில் உள்ள கங்காதி தீர்த்தங்களை விட

இத்தீர்த்தமே மிகவும் ச்லாக்யமான புண்ய தீர்த்தம் என்று ப்ரஹ்மாவால் சொல்லக்கேட்டு ஸமஸ்தரிஷிகளும் அதில் நீராடி ஸந்துஷ்டராய்ப் போந்தார்கள்.

## கௌசீகன் என்ற அந்தணன் விருத்தாந்தம்

இப்புண்ணிய தீர்த்தத்தில் ஒரு தரம் ஸ்நானம் செய்த மாத்திரத்தால் மிகக்கொடியதான பாபத்திலிருந்து விடுபட்டு மோக்ஷமடைந்தான் கௌசிகன் என்கிற ஓர் அந்தணன்.

முன்னொருகால் க்ருதயுகத்தில் ஸஜ்ஜனங்களைக் கண்டால், நிலவு தென்னலையுங் கண்டாப்போலே ப்ரீதியுடையவனாயும், நன்நடத்தை உடையவனாயும், சாத்வீக குணங்களால் நிறைந்தவனாயும், தாய் தந்தையர்களின் சிச்ரூஷையில் ப்ரவணனாயும் யௌவனசாலியுமான கௌசிகன் என்றொரு ப்ராஹ்மண ச்ரேஷ்டன் வேத வேதாந்தங்களில் சிறந்து விளங்கிநின்றான். அவனுக்கு எண்ணாராத் துயர் விளைவிக்கும் இவையென்ன உலகியற்கை என்றும், பிறப்பிறப்புப் பிணி முதலியவைகளால் துக்கமயமான இவ்வாழ்க்கையில் வெறுப்புண்டாகி ஸர்வ புண்ணிய தீர்த்தங்களுக்குள்ளே ச்ரேஷ்டதமான கங்கையில் நீராட இச்சையுண்டாகி, வெகுதூரம் போக நினைத்துத் தன்னுடைய க்ருஹத்தினின்றும் புறப்பட்டான்.

அநேக திவ்வியதேசங்களிலும், புண்ய தீர்த்தங்களிலும் பகவத் ஸேவையையும் ஸ்நாநங்களையும் செய்து கொண்டு பல நாட்களுக்குப் பிறகு தண்டகாரண்யத்தின் மத்யப்ரதேசத்தை அடைந்தான். அப்பொழுது ஸூர்யாஸ்தமநம் ஆகிவிட்டது. வெகு நாட்களாக சரியான ஆஹாரமில்லாமையாலும், வழிநடையாலும் உண்டான ச்ரமத்தினால் பீடிக்கப்பட்ட அவன் மஹாபயங்கரமான அவ்வனத்தில் கொடிய விலங்குகளினின்றும் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள நினைத்து ஓர் புதரின் மறைவில் படுத்துறங்கினான். மறுநாள் ஸூர்யனுதித்தவாறே எழுந்த அவன் மிகவும் ஆயாஸமுள்ளவனாக உட்கார்ந்திருக்கும்

பொழுது ஓர் சண்டாளன் அவ்வழி போவதை கண்ணுற்றான். பசியினால் கண்ணிருண்டிருந்த ப்ராஹ்மணன் ஒருவனைப் பலபேராகவும் சண்டாளனை மஹாபுருஷனாகவும் நினைத்து அவனைக் கூப்பிட்டுத் தனக்கு உணவு அளிக்குமாறு வேண்டிக் கொண்டான். அச்சண்டாளனும் இப்பிராஹ்மணனுடைய தேஜஸ்ஸைக் கண்டு இவனைத் தன் தோளில் ஏற்றி வைத்துக் கொண்டு தன் வீட்டை அடைந்தான். அங்கு அவனுக்கு அறுசுவையுண்டி அளித்து உண்ணச் செய்தான். பிராஹ்மணனும் பசி மேலீட்டால் நன்றாக உணவருந்தி நித்திரை செய்தான். அப்பொழுது சண்டாளன் தன் பெண்ணை அழைத்து "நீ சென்று அவ்வந்தணனுடைய களைப்பு தீர பரி சரணம் செய்!" என்று சொன்னான். அவளும் நித்திரையில் ஆழ்ந்த அப்பிராஹ்மனனுடைய கரசரணாதிகளை நோவு தீரப் பிடித்து சுஸ்ரூஷை செய்தாள். துயிலினின்றும் விடுபட்டவாறே ப்ராஹ்மணன் அந்நங்கையின் அழகிலீடுபட்டுத் தன் வசமிழந்து அவளைக் கூடிக்கலவி தான் வந்த காரியத்தை மறந்து அவளுடன் வாழ்க்கை நடத்த ஆரம்பித்தான்.

இப்படி பல காலம் அவளுடன் தாம்பத்திய வாழ்க்கை நடத்தி அனேக தேசங்களில் ஸஞ்சாரம் செய்து வரும்பொழுது ஒரு ஸமயம் இம்மஹாபுஷ்கரிணியான ஹ்ருத்தாப நாசினியிலும் நீராடினான். தெய்வ வசமாய் அன்று தை அமாவாஸ்யையாய் அமைந்தது. அதன் பிறகு வெகு காலம் கிடந்து கிழத்தன்மையை அடைந்து அத்தன்மையிலும் உண்டான கஷ்டங்களையும் அனுபவித்து மரணம் அடைந்தான். குலதர்மத்திலிருந்து ப்ரஷ்டனான இவனை யமதூதர்கள் தர்மராஜன் பக்கங் கொண்டு நிறுத்தினார்கள். யமனும் இந்த ப்ராஹ்மணனைக் கண்டவாறே எழுந்திருந்து எதிர்கொண்டழைத்து பூஜித்து "தேவரீர் மோக்ஷஸாம்ராஜ்யத்திற்கு எழுந்தருளலாம்" என்று வணக்கத்துடன் விண்ணப்பித்தான். ப்ராஹ்மணனும் மோக்ஷமடைந்தான்.

பிறகு தர்மராஜன் தூதர்களை நோக்கி, ஏன் இப்பிராஹ்மணச்ரேஷ்டரை இங்கு அழைத்து வந்தீர்கள் என்று கடும்சினத்துடன் கேட்க, அதற்கு அவர்கள் மிகுந்த பயத்துடன் "ஸ்வாமிந்! தேவரீர் அறியாதது ஒன்றுமில்லை. ஆயினும் அப்பிராஹ்மணன் தன் குல தர்மத்தை அறவே ஒழித்துவிட்டு சண்டாள ஸ்த்ரீயுடன் யதேச் சமாயிருந்தபடியால், இவன் மோக்ஷமடைய அருஹதையற்றவன் என்று எண்ணி இங்கு அழைத்து வந்தோம்" என்று விண்ணப்பித்தார்கள். இதைக்கேட்ட யமன் சிரித்துவிட்டு, "இவ்வந்தணன் எவ்வளவு கொடிய பாபத்தைச் செய்திருந்த போதிலும் ஹ்ருத்தாபநாசிநீ என்னும் ஸரஸ்ஸில், அதிலும் தை அமாவாஸ்யையில் நீராடியதால் ஸர்வபாபத்தினின்றும், விமுக்தனானான். ஆகையால் அவன் மோக்ஷம் செல்லத் தகுந்தவன்" என்று சொன்னான். இதைக் கேட்ட யம தூதர்கள் மிகவும் ஸந்துஷ்டரானார்கள்.

## ஸ்ரீ கனகவல்லித்தாயார் என்கிற வஸுமதியின் விவாஹம்

அவ்வீக்ஷாரண்யத்தின் நடுவே தர்மஸேனபுரம் என்று ஓர் நகரம் உண்டு. அதை திலீப மஹாராஜன் வம்சத்தில் பிறந்த தர்மஸேனமஹாராஜன் நீதி தவறாமல் சிறப்பாக ஆண்டு வந்தான். மஹா பதிவ்ரதையான கௌதமி என்னும் அவனுடைய மனைவி ரூபம் முதலான ஸர்வகுணங்களாலும் ஸ்ரீ மஹாலக்ஷ்மியைப் போல் விளங்கி வருங்காலத்தில் அவர்களுக்கு ஸர்வோத்தம லக்ஷணங்களுடன் கூடிய ஒரு பெண் பிறந்தது. அதற்கு வஸுமதி என்று பெயரிட்டு மிக அருமையாக வளர்த்துவர, வஸுமதியும் நங்கைப்பருவமெய்தினள். ஒரு நாள் அவ்விளநங்கை வீக்ஷாரண்யத்தில் ஹ்ருத்தாப நாசினியின் கரையிலுள்ள நந்தவனத்தில் தன் சேடிகளுடன் வந்து மலர் கொய்து கொண்டிருக்குங்கால் ஸ்ரீவீரராகவன் வெகு அழகான ஓர் ராஜகுமாரனாக அம்மங்கை முன்தோன்றி, 'பெண்ணே! நீ யார்? உன் விருத்தாந்தங்களை நான் அறிய விரும்புகிறேன்.

உனது இருப்பிடம் எது ? விவரமாக எனக்குச் சொல்லவியலுமோ' என்று வினவ அம்மடமங்கையும் நாணத்தால் தலைகுனிந்த வண்ணம், புன்முறுவலுடன் 'ஸ்வாமிந்! நான் தர்மஸேன மஹாராஜனின் பெண் வஸுமதி, மலர் பறிக்க வேண்டி சேடியருடன் இந்த உத்யான வனத்திற்கு வந்தேன், உம்மை தரிசித்த மாத்திரத்தில் என் தேஹம் பரவசமாய் விட்டது' என்று தனது கிளிக்கொப்பான சொல்லால் பதிலுரைத்தாள். தாம் ஹ்ருத்தாப நாசிநிக் கரையில் யுத்த விடாய் தீரவந்த சயனித்திருப்பதையறிந்த ஸ்ரீ மஹாலக்ஷ்மி தேவியே இப்படி வந்து அவதரித்திருக்கிறாள் என்று பகவானான ராஜகுமாரனும் நினைத்து, பெண்ணே! உனக்கு விவாஹமாகிவிட்டதா ? என வினவ, நங்கையும் எனக்குத் தகுந்த வரன் இதுவரை கிடைக்காததால் என் பிதாவும் மிகவும் அலைகிறார். உமக்கு ஸம்மதமானால் நீரே என் பிதாவைக் கேட்டு, உமக்கே என்னைக் கொடுத்து மணம்முடிக்க இதோ ஹ்ருத்தாபநாசிநீ கரையிலுள்ள ஸ்ரீ வீரராகவனை ஸகலரும் வந்து ஸேவித்து அவரவர்கள் கோரிய இஷ்டஸித்தியை அடைவதுபோல் நீரும் அவரை ஸேவித்து உமது மனதிலுள்ள குறைகளைத் தீர்த்துக் கொள்ளும் என்றாள். இதைக்கேட்ட ராஜகுமாரன் மிகவும் மோஹித்து, சந்திரபிம்பம் போன்ற முகமும், அரவிந்தம் போலுள்ள கண்களும், மின்னல்கொடி போன்ற இடையும், கருவண்டு போலுள்ள கூந்தலும், கோவைப்பழம் போன்ற உதடுகளும், ஹம்ஸத்தின் நடை போன்ற நடையழகும், பூமிப்பிராட்டியைப் போன்ற பொறுமையும் ஒருங்கே கூடிய இவள் மஹாலக்ஷ்மியேதான் என மனதில் நினைத்து, ஆரணங்கே! என்னை மணக்க உனக்கு விருப்பமுண்டானால் அதற்கு உங்கள் குலதெய்வமான இந்த வீரராகவனால் எந்த இடையூறே வாராதுகாண். இது ஸத்யமான வார்த்தை என்றார். உடனே அம்மடந்தையும் உத்யானத்தில் நடந்த இவ்விஷயங்களைத் தன் பிதாவுக்கு அறிவிக்க தர்மசேஷ மஹாராஜாவும் மந்திரி முதலான ஸமஸ்த பரிவாரங்களுடன் சென்று அந்த ராஜகுமாரனை வரவேற்றார். அந்த ராஜகுமாரனைப் பார்த்த உடனேயே மஹாராஜா அதிஸந்துஷ்டராய் ஓ

ராஜகுமாரரே! உம்முடைய ஊர், பெயர், வம்சம், கோத்ரம் முதலியவற்றை நானறிய விரும்புகிறேன். தயவுடன் சொல்ல வேண்டும் என்று கேட்க, ராஜகுமாரனும் நீர் வினவியவைகளை என்னால் சொல்ல இயலாது. வேண்டுமாகில் உம்முடைய கன்னிகையை எனக்கு மணம் செய்து கொடுப்பீராகில், நான் அவளோடு - ஸதாகாலமும் இங்கேயே அஷ்டைச்வர்யத்துடன் நித்யமாய் வஸிக்கிறேன் என்று ஸ்ரீ வீரராகவன் முன் ஸத்யம் செய்து கொடுத்தார். பிறகு தர்மஸேன மஹாராஜாவும் மிகுந்த ஸந்தோஷத்துடன் திருக்கல்யாணப் பந்தலிட்டு வஸுமதி தேவியை அந்த ராஜகுமாரன் கையில் ஸகல வேதகோஷங்களும் வாத்ய கோஷங்களும் முழங்க கன்னிகாதானம் செய்து கொடுத்தார். மணவாளப் பிள்ளையாய் வந்த மந்மதபுருஷனும் ஸகலரும் பார்த்துக் கொண்டிருக்கும்போதே அந்த வஸுமதியின் கையைப் பிடித்துக் கொண்டு அங்கு திருக்கோயில் கொண்டெழுந்தருளியுள்ள ஸ்ரீ வீரராகவன் ஸன்னதியில் சென்று சேஷதல்பத்தின் மேலேறி அந்தர்தானனானார். அப்பொழுது தான் தர்மஸேன மஹாராஜனும் மணவாளப்பிள்ளையை ஸாக்ஷாத் ஸ்ரீ வீரராகவனாகவும் தன் பெண்ணாய் வந்த வஸுமதியை ஸ்ரீ மஹாலக்ஷ்மியாகவும் மனதில் நினைத்து ஸேவித்து பேரானந்தமடைந்து நின்றார்.

பகவான் தன் திருக்கல்யாண மஹோத்ஸவ ஜ்ஞாபகார்த்தமாக, அந்த தர்மஸேன மஹாராஜனின் ஜன்மநக்ஷத்திரமான தை பூரட்டாதிக்குப் பத்துநாள் முன் தொடங்கி திருக்கல்யாண உத்ஸவம் என்ற ஒரு ப்ரஹ்மோத்ஸவம் கண்டருளுவதாகவும், தை மாத பூரட்டாதி தினம் மங்கள ஸ்நாநமான தீர்த்தவாரியும் கண்டருளுகிறோம் என்று நியமித்தருளினார். ஸ்ரீ வீரராகவனுக்கு சைத்ரமாஸம் ப்ரதானமாய் நடக்கும் ப்ரஹ்மோத்ஸவம் போல் தை மாதத்திலும் ஒரு ப்ரஹ்மோத்ஸவம் பகவந்நியமனத்தால் நடந்து வருகிறது. இவ்வுத்ஸவத்தில் அந்த தர்மஸேநபுரமாய் இருந்த மக்ஷிகாவநத்திற்கு (ஈக்காட்டிற்கு) ஸ்வாமி எழுந்தருளுகிறார்.

ஸ்ரீ மஹாலக்ஷ்மியை பெண்ணாய் பெற்ற பெருமையாலும் ஸ்ரீ பகவானே நேரில் வந்து மணந்து தனக்கு ஸேவை ஸாதித்தாலும் அந்த தர்மஸேன மஹாராஜனும் அவன் மனைவி கௌதமி தேவியும் ஸ்ரீ வீரராகவன் திருவருளைப் பூர்ணமாகப் பெற்றுப் பேரானந்தத்துடன் நற்கதியை அடைந்தார்கள்.

முன்னொரு கல்பத்தில் ஸ்ரீராமன் அச்வமேதயாகம் செய்த ஸமயம் ஸ்வர்ண ஸீதையாயிருந்து யாகபூர்த்தி செய்தமையால் அவளே இங்கு வஸுமதியாகிற கனகவல்லியாகத் தோன்றினாள் என்று ஐதிஹ்யமுண்டு.

## ஸ்ரீ சாலிஹோத்ர முனிவரின் வரலாறு

ஆதியுகத்தில் புருபுண்யர் என்னும் பெயர் பூண்ட அந்தண ச்ரேஷ்டர் ஸதீ என்னும் தன் பார்யையுடன் பதரிகாச்ரமத்தில் தவம் புரிந்து வருகையில் அவர்கள் புத்ரபாக்யமில்லாது வருந்தி, அதற்காக காம்யபலனைத்தரக்கூடிய 'சாலியஜ்ஞம்' என்றொரு யாகத்தைச் செய்யக்கருதி இருபத்தெட்டு சாலிநெற்கள் சேர்ந்ததொரு ஆஹுதியாக ஆயிரத்தெட்டு ஆஹுதிகளை மிக்க ஒழுக்கத்துடன் முறைப்படி நடத்தி ஒரு வருஷ காலத்தில் அந்த யாகத்தை முடித்து பூர்ணாஹுதி செய்யும்போது ஸ்ரீ பகவான் அந்தயாகாக்நியின் மத்தியின் ஸர்வாபரணாயுதங்களுடன் தோன்றி, 'ஓ ப்ராஹ்மணோத்தமரே! உம்முடைய சாலியஜ்ஞத்தால் நான் மிகவும் த்ருப்தனானேன். நீர் உமக்கு வேண்டிய வரத்தைக் கேளும்' என்று கேட்க, புருபுண்யரும் பரமபக்தியுடன் அஞ்சலி செய்த கரத்துடன் 'ஸ்வாமிந்! அடியேனுக்கு ஒரு ஸத்புத்திரன் உண்டாக அருள்புரிய வேண்டும்' என்று ப்ரார்த்தித்தார். பக்த பராதீனனான பகவானும் அப்படியே உமக்கு ஓர் உத்தமகுணமுடைய ஆண் குழந்தை உண்டாகும். நீர் சாலியஜ்ஞம் செய்து புத்திரப்பேறு பெற்றமையால் அவனும் 'சாலிஹோத்ரன்' என்னும் பெயருடன் ப்ரஸித்தி பெற்று வாழ்வான் என்று அருளிச் செய்து மறைந்தார்.

உடனே புருபுண்யரும் அந்த யாக ப்ரஸாதமான ஹோமஷேஷத்தில் கிடைத்த சாலி நெற்பொறிகளை தனது பத்நிக்கு கொடுத்தார். அதை அருந்திய ஸதீதேவியும் கர்ப்பவதியாகி யதாகாலத்தில் அதிவிலக்ஷணமான ஓர் ஆண் குழந்தையைப் பெற்றாள். புருபுண்யரும் அக்குழந்தைக்கு உசிதகாலங்களில் ஜாதகர்மாதிகளைக் குறைவறச் செய்து நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்த்து தக்க காலத்தில் விவாஹத்தையும் செய்து மகிழ்ந்தார். சாலிஹோத்ரரும் தன் பத்நியுடன் நித்ய கர்மங்களைச் செய்து பகவானையும் ஆராதித்து தன் மாதா பிதாக்களின் சிச்ரூஷை காலம் தவிர மற்ற காலங்களில் தவம் செய்ய ஆரம்பித்து, தீர்த்த யாத்திரையாய் வரும்போது வீக்ஷாரண்யத்தை வந்தடைந்தார். அதிலுள்ள ஹ்ருத்தாப நாசிநீ என்னும் புண்யஸரஸ்ஸில் தை அமாவாஸ்யையன்று ப்ரஹ்மாதி ஸகலதேவர்களும், ஸமஸ்தரிஷிகளும், அப்ஸரஸ் ஸ்த்ரீகளும் நான்கு திக்குகளிலிருந்தும் கூட்டம் கூட்டமாக வந்து நிறைந்து ஸ்நாநதர்ப் பணாராதனாதிகளைச் செய்து ஸந்தோஷித்துச் செல்வதைப் பார்த்த சாலிஹோத்ரரும் ஏகாந்தமான ஓர் இடத்தில் ஸ்நாநதர்ப் பணாராதனாதிகளை மிகுந்த பக்தியுடன் செய்து ஒரு வருஷ காலம் ஆஹாரம் இல்லாமல் அங்கு அருந்தவம் செய்யக்கருதி, அன்று காலையில் பொறுக்கிச் சேர்த்த நெல்லை அரிசியாக்கி அதை மாவாகச் செய்து அந்த அன்னமாகிய மாவை நான்கு பாகமாக்கி அதிதியின் பாகத்தை வைத்து அதிதியின் வரவை எதிர்பார்த்திருந்த ஸமயத்தில் பகவான் ஓர் கிழ அந்தண ரூபத்துடன் பசி தாகத்துடனும் வருந்தி வருபவர் போல் சாலிஹோத்ரரின் ஸமீபம் வந்து சேர்ந்தார். அதிதியாய் வந்த அந்தணரை மிகுந்த் பக்தியுடன் உபசரித்து அதிதிபாகமாய் வைத்திருந்த மாவை ஸமர்ப்பித்து அமுது செய்ய வேண்டவும், கிழவரும் அதை புஜித்து இன்னும் பசி தீரவில்லை என்று சொல்லி மற்ற மூன்று பாகங்களையும் கேட்டு வாங்கி புஜித்துவிட்டு திருப்தியாகப் போர்ந்து மறைந்தார்.

சாலிஹோத்ரரும் மிக்க ஸந்தோஷத்துடன் அன்று உபவாஸமாகவே இருந்துவிட்டு மீண்டும் ஒரு வருஷகாலம் வரை ஆஹாரமில்லாது அந்த ஹ்ருத்தாபநாசிநியின் வடகரையில் பகவானைக் குறித்துத் தவம் செய்ய ஸங்கல்பித்துக் கொண்டு மிக ச்ரத்தையுடனும் பக்தியுடனும் தவம் செய்ய ஆரம்பித்தார். ஒரு வருஷகாலம் கழித்து, முன்போல் மறு தை அமாவாஸ்யை அன்று காலையில் ஸமஸ்த தேவர்கள் ரிஷிகள் அப்ஸரஸ்ஸுகள் மனிதர்கள் எல்லோரும் ஒரே ஸமயத்தில் அங்கு வந்து சேர்ந்து அப்புண்யதீர்த்தத்தில் நீராடி ஆராதன தர்ப்பணாதிகளை பயபக்தியுடன் செய்து ஸந்துஷ்டர்களாய் செல்வதை சாலிஹோத்ரரும் அறிந்து தன்னுடைய தவம் பூர்த்தியாய்விட்டதென்று ஸந்தோஷத்துடன் முன்போல் ஸ்நாநதர்ப்பணாதிகளைச் செய்து மாவாகிய அன்னத்தை பகவானுக்கு ஆராதன பூர்வமாக நிவேதனம் செய்து அதிதி வரவை எதிர்பார்த்திருந்த ஸமயம் முன்போலவே ஒரு வ்ருத்த ப்ராஹ்மணர்கையில் தடியூன்றி மிகுந்த ஸ்ரமத்துடன் சாலிஹோத்திரரை நெருங்கி வந்து பசிக்கு அன்னமும், தாகத்துக்கு ஜலமும், படுக்க இடமும் கொடுப்பீரென்று யாசித்து நின்றார் ஸ்ரீ சாலிஹோத்ர முனிவரும் நாம் பாக்யம் பெற்றோம் என்ற ஸ்ந்தோஷத்துடன் அக்கிழவருக்கு அதிதி பாகத்தை ஸமர்ப்பித்து அமுதுசெய்ய பிரார்த்தித்தார். அதை அமுது செய்த அந்தணர் அத்ருப்தராகவே இருப்பதைப் பார்த்த முனிவரும் மற்ற பாகங்களையும் அன்புடன் பரிமாறி அமுது செய்ய வேண்டி நின்றார். கிழவரும் எல்லாவற்றையும் பூர்ணமாய் அமுதுசெய்துவிட்டு மிகவும் திருப்தனானேன் நடந்து வந்த ச்ரமம் தீர படுத்துறங்க எவ்வுள் என்று வினவ சாலிஹோத்ரரும் தன் பர்ணசாலையாகிய இடத்தைக் காட்டி, இவ்விடம் தேவரீருடையதே இதில் சயனிக்கலாம் என்று விண்ணப்பம் செய்து, தாம் வைத்திருந்த மரவுரி என்ற போர்வை (பப்புள்ளி துப்பட்டி)யை கொடுக்க வ்ருத்தரூபியாய் வந்த அந்தணரும் அதில் தெற்கே திருமுடியை வைத்து சாய்ந்து அருளியபோது, ஆகாயத்தில் துந்துபி முதலான வாத்யங்கள் முழங்கவும்,

கந்தர்வர்கள் கானம் செய்யவும், அப்ஸரஸ்ஸுக்கள் நர்த்தனமாடவும், தேவர்கள் மலர்மாரி பொழியவும் அனேக மங்களகரமான சுப சகுணங்கள் உண்டாயின. மறுகணமே அங்கு சயனித்த அந்த வ்ருத்த ப்ராஹ்மண ரூபத்தில் வந்த பகவான் சாலிஹோத்ர முனிவருக்கு தன் நிஜ ஸ்வரூபத்துடன் ஸேவை ஸாதித்து ஓ முனிவரே! உம்முடைய பக்திக்கு வசனாய்ப்போந்தேன் உமக்கு வேண்டியதைக் கேளும் என்று நியமித்தருள, முனிவரும் கமலாகாந்தனைக் கண்ணாரக் கண்டுகளித்துக் கூத்தாடி பலமுறை தெண்டனிட்டு ஸ்தோத்திரங்களைப் பண்ணி நாதழுதழுக்க நின்று ஸ்வாமிந்! அடியேனுக்குத் தேவரீருடைய கைங்கர்யமாகிய நித்யஸேவையைக் காட்டிலும் வேறு வரம் வேண்டுமா? இது முதல் எக்காலத்தும் தேவரீர் நித்ய ஸாந்நித்யம் செய்தருளி அடியேனை அநுக்ரஹிக்க வேண்டுகிறேன். அன்றியும் இப்பாரின் கண் உள்ள மாந்தர்களின் தீயத்தொழில்களைக்கருதாது காத்து அருள்புரிந்து அவரவர்களின் இஷ்ட ஸித்தியும் அடைய அபயம் அளித்துக் காக்க வேண்டுமென்று விண்ணப்பம் செய்தார்.

பக்தவத்ஸலனான பகவானும் முனிவரின் விருப்பப்படியே அனுக்ரஹித்து அவ்விடத்திலேயே தெற்கே திருமுடியை வைத்து சயனித்துத் தனது நாபிக்கமலத்திலே தோன்றிய நான்முகனுக்கு இடது திருக்கையால் ப்ரணவத்தை உபதேசித்தும், வலது திருக்கையை ஸ்ரீ சாலிஹோத்ர முனிவரின் சிரஸ்ஸில் வைத்து அபயப்ரதானம் செய்து கொண்டு வடக்கே வைத்த திருவடி நிலைகளுடன் சயனித்தருளினார். பகவான் இப்படி இங்கு வந்து சயனித்தவுடன் ஸமஸ்ததேவர்களும், ரிஷிகளும், விஷ்வக்ஸேநாதிகளும் தங்கள் தங்களது பரிவாரங்களுடன் வந்து சேவித்துநின்றனர். பகவான், அவர்களைப் பார்த்து, "நாம் சாலிஹோத்ர முனிவரை கிங்க்ருஹம்" அல்லது படுக்க "எவ்வுள்" என்று கேட்டு சயனித்ததால் இத்தலத்திற்கு இது முதல் 'கிங்க்ருஹபுர' மென்றும் தமிழில் 'திருஎவ்வுள்' என்றும் நமக்கு 'கிங்க்ருஹேசன்' (எவ்வுட்கிடந்தான்) என்கிற

திருநாமங்களும் உண்டாகக்கடவது. நாமும் இனி எக்காலமும் இங்கேயே நித்தியவாஸம் செய்வோம் என்று திருவாய் மலர்ந்தருளினார். அன்று முதல் ஸ்ரீ பூமி நீளா கனகவல்லி நாயிகாஸமேதரான திருஎவ்வுள்கிடந்தானுக்கு ஸகல உபசாரங்களையும் செய்ய வேண்டி ஸநதாதிகளும் நாரதாதி ரிஷிகளும், விஷ்வக்ஸேநாதிகளும் தத்தம் கைங்கர்யங்களை குறைவறச் செய்து பகவானாலேயே நியமித்தருளிய ஸ்ரீ பாஞ்சராத்ரசாஸ்த்ரத்தில் சொல்லியபடி நித்யநைமித்திகா ராதனாதிகளைச் செய்து அதிஸந்துஷ்டர்களாய் இந்த க்ஷேத்ரத்திலேயே நித்யவாஸம் செய்து மகிழ்கிறார்கள் என்று தேவபாகருக்கு ஸ்ரீசாலிஹோத்ர மஹரிஷியே சொன்ன இந்த புண்யாவர்த்த க்ஷேத்ர மாஹாத்ம்யத்தை மார்கண்டேய முனிவர் ஸஹஸ்ரானீக மஹாராஜனுக்கு உபதேசித்தருளினார். இப்படி அதிவிலக்ஷணமாய் ரிஷியின் பக்திக்கும், க்ஷேத்ரத்தின் பெருமைக்கும், புண்யஸரஸ்ஸின் மஹிமைக்கும் உகந்தெழுந்தருளி நித்யவாஸம் பண்ணுகிற திருஎவ்வுள்கிடந்தானை ஆழ்வாராதிகளும் ஆசார்யாதிகளும் நாதமும்பெழப் பாடிப் புகழ்ந்து மெய்தழும்பத் தொழுதேத்தி இன்புற்றனர்.

அந்த புண்யக்ஷேத்ரத்திற்குச் சென்று ஹ்ருத்தாப நாசநத்தில் ஸ்நாநம் செய்து ஸ்ரீ வீரராகவரூபியான ச்ரிய: பதியினுடைய திவ்யவிமானத்தை ஸேவிப்பதினால் அனேக ஜன்மங்களில் செய்த பாபத்தின் பலனாக அனுபவித்து வரும் வயிற்று வலி, தலை வலி, வ்ருணம், பிரவிச் செவிடு, குருடு முதலிய எல்லா வ்யாதிகளும் நிச்ஷேமாய் நசித்து அந்த ரோகிகளுடைய சரீரம் ஆரோக்யத்துடனிருக்கக் காண்கின்றோம். இவைகளை ப்ரத்யக்ஷமாகக் காண்கையாலே நாஸ்திகர்களுக்கு விச்வாஸத்தையுண்டு பண்ணக்கூடிய அந்த க்ஷேத்ர வைபவம் பண்டித பாமரர்கள் வாசியற ஸர்வஜனங்களும் அறியக்கூடியதாயிருக்கின்றது. இவ்விதம் அநிஷ்டங்கள் நிவ்ருத்தியை அடைவதுபோல் இஷ்டங்களான மோக்ஷாந்தமான ஐச்வர்யமும் கிடைக்கக் காண்கிறோம். எவனொருவன் ஆத்ம

சுத்தியுடன் தனது சக்திக்கனுகுணமாக ஒரு வருஷமோ, ஒரு மாதமோ, ஹ்ருத்தாபநாசநதீர்த்தத்தில் ஸ்நானம் செய்தானாகில் அவன் கோரும் ஸத்ஸந்தான ஆயுராரோக்ய ஐச்வர்யாதி பலன்களைக் கோரினபடியே அடைவான். தேஹாவஸானத்தில் மோக்ஷத்தையும் அடைவான்.

மோக்ஷத்தை அடைவான் என்பதை அறிந்து கொள்வது தான் எவ்விதமென்னில்? அத்திப்பட்டு ஸ்ரீ அழகியசிங்கர் ஸாதித்துள்ள ஒரு வ்ருத்தாந்தத்தைக் கூறுகின்றோம், கேண்மின். ஒரு அக்ரஹாரத்தில் முட்டாளாய் ஊமைபோன்று பேசவும் தெரியாத ஒரு வைஷ்ணவன் இருந்தான். அவன் வர்ணாச்ரமங்களுக்கனுகுணமான ஆசாரநுஷ்டானங்களை ஒன்றும் செய்தவனில்லை. ஆயினும் அமாவாஸ்யைகள் தோறும் திருவுள்ளூருக்கு வந்து ஹ்ருத்தாபநாசத்தில் ஸ்நானம் செய்து ஸ்ரீ வீரராகவனை ஸேவித்துப் போவது என்பதை மட்டும் முரட்டு விரதமாக வைத்துக் கொண்டிருந்தான். அவன் மறிப்பதற்குச் சற்றுமுன் பப்பள்ளிதுப்பட்டியுடன் பெருமாள் வந்து என்னை அழைத்துக் கொண்டு போகின்றார் என்று கூச்சல் போட்டு ப்ராணனை விட்டான். இவ்விதமாக கண்ணெதிரில் கண்டவைகள் பல, ஆகையில் ப்ரத்யக்ஷமாகவும் காணக்குறையில்லை.

கன்னிகையானவள் ஒரு மாதமாவது அந்த புண்ய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்தால் பந்து சீலலக்ஷணத்தோடு கூடியவனாய் வித்யா விநய ஆயுராரோக்யாதிகளையுடைய வனாயுமுள்ள பதியை அடைந்து சுகமாயிருப்பாள். விவாகமான பர்த்தாவின் அனுமதி பெற்று ஒரு ஸம்வத்ஸரம் புண்ய தீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணினாளாகில் ஆயுஷ்மான்களாயும் அழகுடையவர்களாயும், குணமுடையவர்களாயும், ஜீவன்களாயும், ஸத்புத்ரசாலிகளாயும், இருக்கின்ற புத்ரர்களைப் பெற்று மகிழ்வாள். ப்ராம்மண க்ஷத்ரிய, வைச்ய, சூத்ராதிகளான நான்கு வர்ணத்தவரும் இந்த க்ஷேத்திரத்தில் விஷ்ணுவை சரணமடைந்து

முக்தியை அடைகின்றனர். அதுபோலவே ப்ரஹ்மசாரி க்ருஹஸ்தன் வானப்ரஸ்தன், ஸந்யாஸி என்னும் நான்கு ஆச்ரமத்தாரும் அவ்விடத்திற்குச் சென்று எம்பெருமானைச் சரணமடைந்து முக்தியைப் பெறுகின்றனர்.

இக்கலியுகத்தில் பக்தர்களின் துயர்களைப் போக்கி இஷ்டங்களைத் தந்தருள்கின்ற எவ்வுட்கிடந்தானின் நித்யவாஸ ஸ்தலமாகிய இந்த புண்யாவர்த்த க்ஷேத்ரமாஹாத்யத்தை (வரலாற்றை) எவர்கள் பக்தியுடன் படித்தாலும், கேட்டாலும் இப்புத்தகாமவது அவர்கள் வீட்டில் இருந்தாலும் அவர்களுக்கு எவ்வுட்கிடந்தான் இஹத்திலும் ஸகல க்ஷேமங்களையும் ஈந்து பரத்திலும் தன்னுடைய ஸாயுஜ்யமான மோக்ஷத்தை தந்தருளி அநுக்ரஹிக்கிறார் என்பது திண்ணம்.

சுபம்.

★ ★ ★

இத்தலத்திற்கு பெருமாள்ஸேவார்த்தமாக வரும் யாத்ரீகர்களுக்கு வேண்டிய சௌகரியங்களின் விவரம்:

திருவுள்ளூர் என்பது சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனிலிருந்து அரக்கோணம் போகும் ரயில் பாதையில் மத்தியிலுள்ளது. பஸ்களும் பலமார்க்கங்களிலுமிருந்தும் வருகின்றன.

திருவள்ளூர் ஸ்டேஷனிலிருந்து ஊருக்கு 2 மைல் தூரமுள்ளது. அதற்கு டவுன் பஸ்ஸில் சௌகர்யமாய் வரலாம்.

ஸ்நாநபநாதிகளுக்கு வேண்டிய குளம் இருக்கிறது. ஆஹாராதிகளுக்கு அவரவர்களின் விருப்பப்படி அனேக ஓட்டல்களும். தேவஸ்தான பத்துக்கடையும் இருக்கின்றன.

★ ★ ★

ஸ்ரீ

## மங்களாசாஸனம்

### 1. திருமழிசைப்பிரான்

திருமழிசையாழ்வார் நான்முகன் திருவந்தாதி 36-வது பாட்டாகிய நகத்தணை என்கிற பாசுரத்திலும்

### 2. திருமங்கை மன்னன்

திருமங்கையாழ்வார் பெரியதிருமொழி 2-வது பத்தில் உள்ள 2-ஆம் திருமொழி காசையாடை, என்கிற 10 பாட்டினாலும், பெரிய திருமடலில் என்னுடைய வின்னமுதை எவ்வுள் பெருமலையை என்கிற கண்ணியிலும்.

### 3. ஸ்ரீ தூப்புல் வேதாந்த தேசிகன்

ஸ்ரீ தூப்புல்வேதாந்த தேசிகன் கிங்க்ருஹேசஸ்துதி என்கிற ஸ்தோத்திரத்தாலும் மங்களாசாஸனம்.

### 4. ஜோதிராமலிங்க அடிகளார் போற்றிப் பஞ்சகம்

# ஸ்ரீவீரராகவ ஸ்வாமியின் நைமித்திக உத்ஸவத்தின் காலக்ரமங்கள்

## சித்திரை

சித்திரை நக்ஷத்ரத்தில் 9-ஆம் நாள் தீர்த்தவாரியாகக் கண்டருளும் ப்ரஹ்மோத்ஸவம் பத்து நாள் திருவாதிரை உடையவர் சாற்றுமுறை உத்ஸவம்.

## வைகாசி

க்ருத்திகை நக்ஷத்ரம் முதல் தொடங்கி நடக்கும் கோடை உத்ஸவம் 3 நாள்.

சித்திரை நக்ஷத்ரத்தில் 5-வது நாள் தீர்த்தவாரியாக நடக்கும் வஸந்தோத்ஸவம் 5 நாள்.

விசாகம் நம்மாழ்வார் சாற்றுமுறை உத்ஸவம்.

## ஆனி

அமாவாஸ்யை முதல் 3 நாள் தெப்போத்ஸவம்.

சித்திரை நக்ஷத்ரம் பெருமாள் ஜ்யேஷ்டாபிஷேகம். அடுத்து வரும் வெள்ளிக்கிழமை தாயார் ஜ்யேஷ்டாபிஷேகம். இவைகள் இரண்டிற்கும் புறப்பாடு இல்லை.

ஸ்வாதி நக்ஷத்ரம் ஆனி கருடோத்ஸவம் பெரியாழ்வார் திருநக்ஷத்ரம்.

## ஆடி

பௌர்ணமி தினம் ஆடி கருடோத்ஸவம்.

திருவாடிப்பூரம் ஆண்டாள் திருக்கல்யாண உத்ஸவம் 10 நாள்.

## ஆவணி

பௌர்ணமி முதல் 7 நாள் பவித்ரோத்ஸவம்.

ஸ்ரீ ஜயந்தி உரியடி உத்ஸவம்.

## புரட்டாசி

நவராத்ரி உத்ஸவம் 9 நாள். விஜயதசமி பார் வேட்டை உத்ஸவம்.

ஸ்ரீ தூப்புல் வேதாந்ததேசிகன் உத்ஸவம் 10 நாள்.

ஸ்ரீ ஆதிவண்சடகோப யதீந்த்ரமஹாதேசிகன் உத்ஸவம் 10 நாள். இவைகளில் 10-வது தினமாகிய சாற்றுமுறை மிகவும் விசேஷ உத்ஸவம்.

## ஐப்பசி

துலா மாதப்பிறப்பு உத்ஸவம் அமாவாஸ்யை தீபாவளி உத்ஸவம் பூராடம் சேனை முதலியார் சாற்றுமுறை உத்ஸவம் முதலியன.

## கார்த்திகை

க்ருத்திகை நக்ஷத்ரம் திருமங்கைமன்னன் சாற்றுமுறை உத்ஸவம் திருக்கார்த்திகை தீபோத்ஸவம்.

## மார்கழி

பகல் பத்து உத்ஸவம் 10 நாள். அதில் 10-ஆம் நாள் மாலை நாச்சியார் திருக்கோலம். வைகுண்ட ஏகாதசி முதல் 10 நாள் வரை இராப்பத்து உத்ஸவம்.

போகி கல்யாண உத்ஸவம்.

## தை

ஸங்க்ராந்தி கனு பாரிவேட்டை.

பூரட்டாதி நக்ஷத்ரம் 9-வது நாள் தீர்த்தவாரியாகக் கண்டருளும் தை ப்ரஹ்மோத்ஸவம் 10 நாள்.

ரதஸப்தமி உத்ஸவம் திருமழிசைப்பிரான் சாற்றுமுறை.

## மாசி

அமாவாஸ்யை முதல் 3 நாள் தெப்போத்ஸவம்.

மிருகசீர்ஷம் திருக்கச்சி நம்பிகள் சாற்றுமுறை உத்ஸவம் 10 நாள்.

## பங்குனி

சிரவண நக்ஷத்ரம் 5-வது நாளாக நடக்கும் பல்லவோத்ஸவம் 5 நாள் புனர்வஸு முதல் 3 நாள் தவனோத்ஸவம்.

மகம் முதல் 3 நாள் தாயார் பங்குனி உத்திர உத்ஸவம். ஷை கந்தப்பொடி வஸந்தோத்ஸவம் முதலியன.

சித்ரா நக்ஷத்ரம் புட்ளூர் திருவூரல் உத்ஸவம்.

இவைகள் தவிர ஆழ்வார்கள் ஆசார்யர்கள் சாற்றுமுறைகளும், ப்ரார்த்தனை உத்ஸவங்களும் நடைபெறுகின்றன.

ப்ரதி அமாவாஸ்யையன்றும் ப்ரார்த்தனை செலுத்த விசேஷ தினமாகும்.

★ ★ ★



ஸ்ரீ வீரராகவ ஸ்வாமி திருக்கோயில் – திருவள்ளூர்